உ

திருவாவடுதுறைஆதீனப் புலவர்

தா.ம. வெள்ளைவாரணம்

அவர்களின்

# சைவசித்தாந்த

# வினாடி வினா



Saiva Siddhanta Quiz



**திருவாவடுதுறை ஆதீனப்புலவர்**

**தா.ம. வெள்ளைவாரணம்**

| | | |
|---|---|---|
| பிறப்பு | - | 06.09.1927 (குடந்தை) |
| மரபு | - | சோழபுரம் சைவ செட்டியார் |
| படிப்பு | - | குடந்தை நகராட்சிப் பள்ளி<br>குடந்தை சிறுமலர் உயர்பள்ளி<br>மாயூரம் மெய்கண்டார் தமிழ்க் கல்லூரி<br>திருப்பனந்தாள் செந்தமிழ்க் கல்லூரி |
| பணி | - | பேராரசிரியர் (1950 - 1985)<br>திருப்பனந்தாள் செந்தமிழ்க் கல்லூரி |
| பட்டங்கள் | - | 1959 - **திருமுறைச்செல்வர்** - மதுரை ஆதீனம்<br>1960 - **மதுரகவி** - ஸ்ரீ காசி மடம்<br>1998 - **சைவத் தமிழ்மணி** - ஸ்ரீ காசி மடம்<br>8.02.2003 - **ஆதீனப்புலவர்** - திருவாவடுதுறை ஆதீனம்<br>28.05.2004 - **தொல்காப்பியச் செம்மல்** - தஞ்சை பல்கலைக்கழக சார்பு மாநாடு |
| எழுதிய நூல்கள் | - | இது 20-வது நூல் |
| தொடர் சமய விரிவுரை | - | திருவிடைமருதூர், சிதம்பரம் நெய்வேலி, செம்பொன்னார்கோயில் |
| தொடர் சித்தாந்த பயிற்சி விரிவுரை | - | சிதம்பரம், திருவாரூர், சீர்காழி, குடந்தை. |

உ

# சைவசித்தாந்த

# வினாடி வினா

## Saiva Siddhanta Quiz


தயாரிப்பு

திருவாவடுதுறை ஆதீனப் புலவர்

**தா.ம. வெள்ளைவாரணம்**



வெளியீடு

**திருவாவடுதுறை ஆதீன சைவசித்தாந்த**

**பயிற்சி மையம் – சிதம்பரம் கிளை**

**2006**

விலை ரூ. 15.00

ஆசிரியர் - திருவாவடுதுறை ஆதீனப்புலவர்
**தா.ம. வெள்ளைவாரணம்**
18, சிவன் தெற்கு வீதி, **பொறையாறு - 609 301.**
✆ 04364-289148, செல்: 9443806991

வெளியீடு - **சீனு. அருணாசலம்,** அமைப்பாளர்,
திருவாவடுதுறை ஆதீன சைவசித்தாந்த
நேர்முகப் பயிற்சி மையம், சிதம்பரம் கிளை.
16, சின்னக்கடை தெரு, **சிதம்பரம் - 608 001.**
✆ 04144-231166

அச்சு - சித்தாந்தரத்தினம் சு. இராஜவேல்
**"வேல்ராஜ்"** சிதம்பரம், ✆ 04144-225426

# சைவசித்தாந்த வினாடி வினா

## முதல் பகுதி - பொதுச் செய்திகள்

1. சித்தாந்தம் என்ற சொல்லின் பொருள் என்ன?
   **முடிந்த முடிபு**
2. முதன் முதலில் தமிழ் மொழியில் சித்தாந்தம் என்னும் சொல்லைக் கையாண்டவர் யார்?
   **திருமூலர்**
3. சைவசித்தாந்தம் என்னும் தொடரைக் கையாண்ட ஆகமங்களில் ஏதேனும் ஒன்றைக் கூறுக.
   **காமிக ஆகமம்**
4. சைவசமயத்தின் இலக்கியக் கருவூலம் என்று கூறப்படுவன யாவை?
   **பன்னிரு திருமுறைகள்**
5. சைவசித்தாந்த கோட்பாடுகள் இடம் பெற்ற பழந்தமிழ்நூல் யாது?
   **திருக்குறள்**
6. சைவ சமயக்குரவர் நால்வர் யார்?
   **ஞானசம்பந்தர், நாவுக்கரசர், சுந்தரர், மணிவாசகர்**

7. சம்பந்தர் முதலிய மூவர் அருளியது யாது?
**தேவாரம்**

8. மணிவாசகர் அருளியது யாது?
**திருவாசகம்**

9. திருக்கயிலாய பரம்பரை யாவது யாது?
**திருநந்திதேவரால் கயிலையில் தொடங்கி வைத்த பரம்பரை**

10. சைலாதி மரபாவது யாது?
**திருநந்திதேவரை முதல்வராகக் கொண்ட மரபு**

11. சைலாதி என்பது யார்?
**திருநந்திதேவர்**

12. சந்தானம் என்றால் என்ன?
**குருசிஷ்ய பரம்பரை**

13 இருவகைச் சந்தானங்கள் யாவை?
**அகச்சந்தானம், புறச்சந்தானம்**

14 கயிலாயத்துள்ளேயே வளர்ந்த மரபு யாது?
**அகச்சந்தானம்**

15. கயிலாயத்துக்கு வெளியே பூஉலகில் வளர்ந்த மரபு யாது?
**புறச்சந்தானம்**

16. அகச்சந்தானாச்சாரியார் நால்வர் யாவர்?
**திருநந்திதேவர், சனற்குமாரர், சத்தியஞான தரிசினி, பரஞ்சோதி முனிவர்**

17. புறச்சந்தானாச்சாரியார் நால்வர் யார்?
**மெய்கண்டார், அருணந்திசிவம், மறைஞான சம்பந்தர், உமாபதிசிவம்**

18. அகச்சந்தானத்தின் வேறு பெயர் என்ன?
**தேவபரம்பரை**

19. புறச்சந்தானத்தின் வேறு பெயர் என்ன?
**பூதபரம்பரை**

20. திருக்கயிலாய பரம்பரையின் வேறுபெயர் யாது?
**சைலாதி மரபு**

21. தேவபரம்பரை என்பது என்ன சந்தானம்?
**அகச்சந்தானம்**

22. பூதபரம்பரை என்பது என்ன சந்தானம்?
**புறச்சந்தானம்**

23. மெய்கண்டார் அவதரித்த ஊர் எது?
**திருப்பெண்ணாகடம்**

24. மெய்கண்டார் வாழ்ந்த ஊர் எது?
**திருவெண்ணெய் நல்லூர்**

25. மெய்கண்டார் சித்திபெற்ற ஊர் எது?
**திருவெண்ணெய் நல்லூர்**

26. அருணந்திசிவம் அவதரித்து வாழ்ந்த ஊர் எது?
**திருத்துறையூர்**

27. அருணந்திசிவம் சித்தி பெற்ற ஊர் எது?
**திருத்துறையூர்**

28. மறைஞானசம்பந்தர் அவதரித்த ஊர் எது?
**திருப்பெண்ணாகடம்**

29. மறைஞானசம்பந்தர் வாழ்ந்த ஊர்கள் யாவை?
**மருதூர், சிதம்பரம்**

30. மறைஞானசம்பந்தர் சித்திபெற்ற இடம் யாது?
**சிதம்பரத்தின் மேல் எல்லையான திருக்களாஞ்சேரி**

31. உமாபதிசிவம் பிறந்து, வாழ்ந்த ஊர் எது?
**சிதம்பரம்**

32. உமாபதிசிவம் சித்திபெற்ற இடம் யாது?
**சிதம்பரத்தின் கீழ் எல்லையான கொற்றவன்குடி**

33. மெய்கண்டார்க்கு முற்பட்ட சித்தாந்த சாத்திரங்கள் யாவை?
**திருவுந்தியார், திருக்களிற்றுப்படியார், ஞானாமிர்தம்**

34. திருவுந்தியாரை அருளியவர் யார்?
**திருவியலூர் உய்ய வந்த தேவநாயனார்**

35. திருக்களிற்றுப்படியாரை அருளியவர் யார்?
**திருக்கடவூர் உய்ய வந்த தேவநாயனார்**

36. ஞானாமிர்தத்தை அருளியவர் யார்?
**வாகீசமுனிவர்**

37. சிவஞான போதத்தை அருளியவர் யார்?
**மெய்கண்டார்**

38. சிவஞான சித்தியாரை அருளியவர் யார்?
**அருணந்திசிவம்**

39. சிவப்பிரகாசத்தை அருளியவர் யார்?
**உமாபதிசிவம்**

40. சிவஞான போதத்தின் வழிநூல் எது?
**சிவஞானசித்தியார்**

41. சிவஞான போதத்தின் சார்பு நூல் எது?
**சிவப்பிரகாசம்**

42. சிவஞான சித்தியாரின் முதல் நூல் யாது?
**சிவஞானபோதம்**

43. இருபா இருபஃதை அருளியவர் யார்?
**அருணந்திசிவம்**

44. உண்மை விளக்கத்தை அருளியவர் யார்?
**திருவதிகை மனவாசகம் கடந்தார்**

45. சிவப்பிரகாசத்தை அருளியவர் யார்?
**உமாபதி சிவம்**

46. உமாபதி சிவம் அருளிய எட்டு நூல்களின் தொகுப்புக்கு என்ன பெயர்?
**சித்தாந்த அட்டகம்**

47. மறைஞானசம்பந்தர் சித்தாந்த சாத்திர நூல் செய்துள்ளாரா?
**இல்லை**

48. மனவாசகம் கடந்தார் செய்த நூல் என்ன?
**உண்மை விளக்கம்.**

49. அருணந்திசிவம் செய்த நூல்கள் யாவை?
**சிவஞானசித்தியார், இருபா இருபஃது.**

50. மெய்கண்டார் செய்த நூல் யாது?
**சிவஞானபோதம்**

51. திருக்கடவூர் உய்ய வந்த தேவநாயனார் செய்த நூல் யாது?
**திருக்களிற்றுப்படியார்**

52. திருவியலூர் உய்ய வந்த தேவநாயனார் செய்த நூல் யாது?
**திருவுந்தியார்**

53. மெய்கண்டாரின் மாணாக்கர் யார்?
**அருணந்தி சிவம், மனவாசங்கடந்தார் முதலிய 49 பேர்**

54. அருணந்திசிவத்தின் மாணாக்கர் யார்?
**மறைஞானசம்பந்தர்**

55. மறைஞானசம்பந்தரின் மாணாக்கர் யார்?
**உமாபதிசிவம்**

56. உமாபதிசிவத்தின் மாணாக்கர் யார்?
**அருள்நமச்சிவாயர்**

57. அருள்நமச்சிவாயரின் சீடர் யார்?
**சித்தர் சிவப்பிரகாசர்**

58. சித்தர் சிவப்பிரகாசரின் சீடர் யார்?
**அருள்திரு நமச்சிவாய மூர்த்திகள்**

59. திருவாவடுதுறை ஆதீனத்தின் ஸ்தாபகர் யார்?
**அருள்திரு நமச்சிவாய மூர்த்திகள்**

60. திருவாவடுதுறை ஆதீனத்தின் தோற்றக் காலம் யாது?
**கி.பி. 1360**

61. திருவாவடுதுறை ஆதீனத்தில் தற்போது அருளாட்சி செய்து வரும் ஆதீனகர்த்தர் யார்?
**23ஆம் பட்டம் சீர்வளர்சீர் சிவப்பிரகாச தேசிக பரமாச்சாரிய சுவாமிகள் அவர்கள்**

62. சைவசித்தாந்தம் உள்பொருள்களாகக் கொள்ளும் மூன்று யாவை?
**பதி, பசு, பாசம்.**

63. பதி, பசு, பாசம் என்பவற்றின் தமிழ்ப் பெயர் யாவை?
**இறை, உயிர், தளை**

64. பதி, பசு, பாசம் மூன்றும் ஆதியா? அநாதியா?
**அநாதி**

65. அநாதி என்றால் என்ன?
**ஆதி இல்லாதது (அதாவது தொடக்கமில்லாதது, என்றும் உள்ளது)**

66. ஆதி என்றால் என்ன?
**தொடக்கமுள்ளது**

67. அநாதிப்பொருள்களை ஆறு என்று கணக்கிட்டவர் யார்?
**உமாபதிசிவம்**

68. உமாபதிசிவம் குறித்த ஆறு அநாதிப் பொருள்கள் யாவை?
**இறை, உயிர், ஆணவம், மூலகன்மம், சுத்தமாயை, அசுத்தமாயை.**

69. சைவசித்தாந்தக் கொள்கைகள் எதன் அடிப்படையில் நிறுவப்பட்டுள்ளன?
**சற்காரியவாத அடிப்படையில்**

70. இல்லது தோன்றாது, உள்ளது அழியாது என்னும் கொள்கை என்ன பெயர் பெறும்?
**சற்காரிய வாதம்**

71. சற்காரியவாத அடிப்படையில் நிறுப்படாத கொள்கை என்ன பெயர் பெறும்?
அசற்காரிய வாதம்

72. காரியம் உண்டாவதற்கு ஏதுவாக இருப்பது எது?
காரணம்

73. காரணத்தால உண்டான ஆக்கம் எது?
காரியம் (காரியம் = செயப்படு பொருள்)

74. காரியத்துக்கு உரிய மூவகைக் காரணங்கள் யாவை?
**முதற்காரணம், துணைக்காரணம், நிமித்த காரணம்**

75. முதற்காரணத்துக்குக் காட்டும் உவமை யாது?
**மண்**

76. துணைக்காரணத்துக்குக் காட்டும் உவமை யாது?
**தண்டு, சக்கரம்**

77. நிமித்த காரணத்துக்குக் காட்டும் உவமை யாது?
**குயவன்**

78. காரியத்துக்குக் காட்டும் உவமை யாது?
**குடம்**

79. காரியத்தோடு ஒற்றுமை உடைய காரணம் எது?
**முதற்காரணம்**

80. காரியம் தோன்றும் வரை தொடர்புடையதாய் இருந்து பின் நீங்கும் காரணம் எது?
**துணைக்காரணம்**

81. காரியத்தை உண்டாக்கும் கர்த்தா என்ன காரணம்?
**நிமித்த காரணம்**

82. நிமித்த காரணத்தின் வேறுபெயர் என்ன?
**காரணகர்த்தா**

83. பிரபஞ்சத்தின் முதற்காரணம் யாது?
**மாயை**

84. பிரபஞ்சத்தின் துணைக்காரணம் யாது?
**சிற்சத்தி (திருஅருட்சக்தி)**

85. பிரபஞ்சத்தின் நிமித்த காரணம் யார்?
**இறைவன்**

86. காரணத்திலிருந்து தோன்றும் காரிய வளர்ச்சியின் இரண்டு வகைகள் யாவை?
**பரிணாமம், விருத்தி**

87. ஒன்றிலிருந்து மற்றொன்று திரிந்து தோன்றுவது என்ன வளர்ச்சி?
**பரிணாம வளர்ச்சி**

88. பரிணாம வளர்ச்சிக்குக் காட்டும் உவமை யாது?
**பால் தயிர் ஆவது**

89. ஒன்றிலிருந்து மற்றொன்று திரியாமல் விரிவது என்ன வளர்ச்சி?
**விருத்தி வளர்ச்சி**

90. விருத்தி வளர்ச்சிக்குக் காட்டும் உவமை யாது?
**மடித்து வைத்த துணி கூடாரமாக விரிவது**

91. பொருள்களின் இருவகை இயல்புகள் யாவை?
**பொது இயல்பு, சிறப்பு இயல்பு**

92. பொது இயல்பின் வேறுபெயர் என்ன?
**தடத்த இலக்கணம்**

93. சிறப்பு இயல்பின் வேறுபெயர்கள் யாவை?
**சொரூப இலக்கணம், உண்மை இலக்கணம்.**

94. பிறபொருள்களோடு சம்பந்தப்பட்டிருக்கும் இயல்பு என்ன இயல்பு?
**பொதுஇயல்பு**

95. எந்தப் பொருளோடும் சம்பந்தப்படாமல் தனித்திருக்கும் இயல்பு என்ன இயல்பு?
**சிறப்பியல்பு**

96. சித்தாந்த நெறியில் ஒளி என்பது சிறப்பாக என்ன பொருள் தரும்?
**திருவருள்**

97. சித்தாந்த நெறியில் இருள் என்பது சிறப்பாக என்ன பொருள் தரும்?
**ஆணவம்**

98. சித்தாந்த நெறியில் உள்ளம் என்ற சொல் சிறப்பாக என்ன பொருள்படும்?
**உயிர்**



## இரண்டாம் பகுதி - அளவை இயல்

99. அளவை என்பது யாது?
**பொருளுண்மையை அளந்தறியும் கருவி**

100. அளவையைக் குறிக்கும் வடசொல் யாது?
**பிரமாணம்**

101. பிரமாணவது யாது?
**அளவை, அளக்கும் கருவி**

102. பிரமேயமாவது யாது?
**அளக்கப்படும் பொருள்**

103. பிரமாதா என்பது யார்?
**அளப்பவன்**

104. ஞாதுரு என்பது யார்?
**அறிபவன்**

105. ஞானம் என்பது (அளவையின்) எதைக் குறிக்கும்?
**அறியும் கருவியை**

106. ஞேயம் என்பதன் பொருள் என்ன?
**அறியப்படுபொருள்**

107. மூவகை அளவைகள் யாவை?
**காட்சி, கருதல், உரை**

108. காட்சி அளவையின் வேறு பெயர்கள் யாவை?
**பிரத்தியட்சப் பிரமாணம், காண்டல் அளவை**

109. கருதல் அளவையின் வேறுபெயர் யாது?
**அனுமானப் பிரமாணம்**

110. உரை அளவையின் வேறு பெயர்கள் யாவை?
**ஆகமப் பிரமாணம், சப்தப் பிரமாணம்**

111. ஐயம் திரிபின்றி விடயத்தை நேரே அறிவது என்ன அளவை?
**காட்சி அளவை**

112. மறைந்து நின்ற பொருளை உடன் நிகழும் ஏதுவால் அறிவது என்ன அளவை?
**கருதல் அளவை**

113. காட்சியாலும் அனுமானத்தாலும் அறிய முடியாததை ஆப்த வாக்கியத்தால் அறிவது என்ன அளவை? (ஆப்தர்=சான்றோர்)
**உரை அளவை (நூல் அளவை)**

114. விட்டு நீங்காமல் உடன் நிகழும் இயல்புக்கு என்ன பெயர்?
**அவிநாபாவம்**

115. ஆப்த வாக்கியமாவது யாது?
**சான்றோர் செய்த நூல்**

116. ஒருபொருளை இது அல்லது அது என்று ஒன்றிலும் துணிவு பெறாத நிலை யாது?
**ஐயம்**

117. ஒருபொருளை மற்றொரு பொருளாக மயங்கி அறியும் நிலை யாது?
**திரிபு**

118. காண்டல் அளவையின் நான்கு வகைகள் யாவை?
**வாயிற்காட்சி, மானதக் காட்சி, தன் வேதனைக் காட்சி, யோக காட்சி**

119. கருதல் அளவையின் இரண்டு வகைகள் யாவை?
**தன்பொருட்டனுமானம், பிறர் பொருட்டனுமானம்**

120. உரை அளவையின் மூன்று வகைகள் யாவை?
**தந்திரச் சொல், மந்திரச் சொல், உபதேசச் சொல்**

## மூன்றாம் பகுதி - இறை

121. பதி என்ற சொல்லின் பொருள் யாது?
**பசுவுக்கும் பாசத்துக்கும் தலைவன்**

122. இறைவன் உயிரோடு ஒன்றாயும் வேறாயும் உடனாயும் கலந்திருத்தல் என்ன இயல்பு?
**பொது இயல்பு (தடத்த இலக்கணம்)**

123. இறைவன் சச்சிதானந்தமாய் இருத்தல் என்ன இயல்பு?
**சிறப்பு இயல்பு (சொரூப இலக்கணம்)**

124. உலகைப் படைக்கிற நிமித்த காரணன் யார்?
**சிவபெருமான்**

125. உயிர்களை இறைவன் படைக்கிறானா?
**இல்லை(உயிர்கள் அநாதி)**

126. இறைவன் உயிரோடு ஒன்றாய்க் கலந்த நிலையைக் குறிக்கும் சொல் யாது?
**அபேதம்**

127. இறைவன் உயிர்க்கு வேறாய் நிற்கும் நிலையைக் குறிக்கும் சொல் யாது?
**பேதம்**

128. இறைவன் உயிரோடு உடனாய் நிற்கும் நிலையைக் குறிக்கும் சொல் யாது?
**பேதா பேதம்**

129. இறைவன் உடனாய் நின்று உதவுவது என்ன உபகாரம்?
**காணும் உபகாரம்**

130. இறைவன் வேறாய் நின்று உதவுவது என்ன உபகாரம்?
**காட்டும் உபகாரம்**

131. காணும் உபகாரத்தின் பயன் என்ன?
**உயிரின் அறிவிச்சை செயல்கள் பொருளுடன் கலத்தல்**

132. காட்டும் உபகாரத்தின் பயன் என்ன?
**உயிரின் அறிவிச்சை செயல்கள் விளக்கம் பெறுதல்**

133. இறைவன் செய்யும் முத்தொழில்கள் யாவை?
**படைத்தல், காத்தல், அழித்தல்**

134. இறைவன் செய்யும் ஐந்தொழில்கள் யாவை?
**படைத்தல், காத்தல், அழித்தல், மறைத்தல், அருளல்**

135. உயிருக்குத் தனு, கரண, புவன, போகங்களை உண்டாக்குதல் என்பது என்ன தொழில்?
**படைத்தல் தொழில்**

136. தனு முதலியவற்றை ஒரு கால எல்லை வரை நிலை பெறுவித்தல் என்ன தொழில்?
**காத்தல் தொழில்**

137. தனு முதலியவற்றை மாயையில் ஒடுக்குதல் என்ன தொழில்?
**அழித்தல் தொழில்**

138. உலகத்தையே உயிர்கள் நோக்கி இருக்கச் செய்து தன்னை மறைத்து நிற்றல் என்ன தொழில்?
**மறைத்தல் தொழில்**

139. உயிர்களின் மலப்பற்றைப் போக்கித் தனது பேரின்பத்தை நுகர வைத்தல் என்ன தொழில்?
**அருளல் தொழில்**

140. படைத்தல் முதலிய முத்தொழில்கள் எதனிடத்தே செய்யப்படுகின்றன?
**மாயை ஆகிய சடப்பொருளிடத்தில் (சடம் = அசத்து)**

141. மறைத்தல் அருளல் ஆன இரு தொழில்கள் எதனிடத்தில் செய்யப்படுகின்றன?

**உயிர் ஆகிய சித்துப் பொருளிடத்தில்**

142. படைத்தல் முதலிய ஐந்தொழில்களும் யாருக்காகச் செய்யப் படுகின்றன?

**உயிர்களுக்காக**

143. படைத்தலின் நோக்கம் என்ன?

**உயிர்களிடம் மலபரிபாகம் உண்டாக்கல்**

144. காத்தலின் நோக்கம் என்ன?

**உயிர்களை வினைப்போகம் நுகர வைத்தல்**

145. அழித்தலின் நோக்கம் என்ன?

**உயிர்களின் இளைப்பு ஒழித்தல்**

146. மறைத்தலின் நோக்கம் என்ன?

**உயிர்கள் தத்தம் வினைப்பயனை நுகர்தலில் ஆசை உண்டாக்கல்**

147. அருளலின் நோக்கம் என்ன?

**உயிர்களுக்குப் பேரின்பத்தை வழங்குதல்**

148. இறைவனின் குணமாக உபநிடதம் கூறுவன யாவை?

**சத்து, சித்து, ஆனந்தம்**

149. இறைவனின் குணமாக ஆகமம் கூறுவன யாவை?

**தன் வயமுடைமை முதலிய எண்குணங்கள்**

150. அநாதி முத்தன் யார்?
**சிவன்**

151. ஆதி முத்தன் யார்?
**ஆன்மா**

152. தானே அறியும் சித்து எது?
**சிவம்**

153. அறிவிக்க அறியும் சித்து எது?
**ஆன்மா**

154. அநாதி முத்த சித்துரு எது?
**சிவம்**

155. அநாதி பெத்த சித்துரு எது?
**ஆன்மா**

156. நவம் தரு பேதங்கள் யாவை?
**சிவம், சத்தி, நாதம், விந்து, சதாசிவம், மகேசுவரன், உருத்திரன், விஷ்ணு, பிரமன்**

157. நவந்தரு பேதங்களுள் அருவத்திருமேனி யாவை?
**சிவம், சத்தி, நாதம், விந்து**

158. நவந்தரு பேதங்களுள் அருவுருவத்திருமேனி எது?
**சதாசிவம்**

159. நவந்தரு பேதங்களுள் உருவத்திருமேனி யாவை?
**மகேசுவரன், உருத்திரன், மால், அயன்**

160. உருவத்திருமேனியின் வேறு பெயர்கள் யாவை?
**சகளத் திருமேனி, வியத்த லிங்கம்**

161. அருவத் திருமேனியின் வேறு பெயர்கள் யாவை?
**நிட்களத் திருமேனி, அவ்வியத்த லிங்கம்**

162. அருவுருவத் திருமேனியின் வேறுபெயர்கள் யாவை?
**சகளநிட்களத் திருமேனி, வியத்தாவியத்த லிங்கம்**

163. உருவத் திருமேனிகளில் மூன்று வகை யாவை?
**போக வடிவம், யோக வடிவம், வேக வடிவம்**

164. கலியாண சுந்தரர் போல உயிர்க்கு உலக இன்பத்தை வழங்கும் திருமேனி என்ன வகை?
**போக வடிவம்**

165. தட்சிணா மூர்த்தி போல உயிருக்கு ஞானத்தை வழங்கும் திருமேனி என்ன வகை?
**யோக வடிவம்**

166. கால சம்மாரர் போலக் கொடிய வரைத் தண்டிக்கும் திருமேனி என்ன வகை?
**வேக வடிவம்**

167. சிவனுக்கு ஈசான மந்திம் எவ்வுறுப்பு?
**சிரசு**

168. ஈசான மந்திரத்தால் செய்யும் தொழில் என்ன?
**அநுக்கிரகம் (அருளல்)**

169. சிவனுக்குத் தத்புருட மந்திரம் எவ்வுறுப்பு?
**முகம்**

170. தத்புருட மந்திரத்தால் செய்யும் தொழில் என்ன?
**திரோபவம் (மறைத்தல்)**

171. சிவனுக்கு அகோர மந்திரம் எவ்வுறுப்பு?
**இதயம்**

172. அகோர மந்திரத்தால் செய்யும் தொழில் என்ன?
**சங்காரம் (அழித்தல்)**

173. சிவனுக்கு வாமதேய மந்திரம் எவ்வுறுப்பு?
**உந்தி**

174. வாமதேய மந்திரத்தால் செய்யும் தொழில் என்ன?
**திதி (காத்தல்)**

175. சிவனுக்குச் சத்தியோசாத மந்திரம் எவ்வுறுப்பு?
**முழந்ததாள்**

176. சத்தியோசாத மந்திரத்தால் செய்யும் தொழில் என்ன?
**சிருட்டி (படைத்தல்)**

177. இறைவனுக்கு உரிய மூன்று அவத்தைகள் (நிலைகள்) யாவை?
**இலயம், போகம், அதிகாரம்**

178. இறைவன் உயிருக்கு மானுடப் பிறப்பைத் தந்தது ஏன்?
**இறைவனை மனம், மொழி, மெய்களால் வழிபட**

179. இறைவன் செய்த பொது நூல் எது?
**வேதம்**

180. இறைவன் செய்த சிறப்பு நூல் எது?
**ஆகமம்**

181. இறைவன் திருமேனி மாயையால் ஆனாதா?
**இல்லை**

182. இறைவன் திருமேனி எதனால் ஆனது?
**திருவருட் சத்தியால்**

183. ஐவகைச் சத்திகள் யாவை?
**பராசத்தி, ஆதிசத்தி, இச்சாசத்தி, ஞானசத்தி, கிரியாசத்தி**

184. சத்தி ஐவகை என்றால் சத்தி பலவோ?
**சத்தி ஒன்றே; அது காரிய வேறுபாட்டால் பல பெயர்களைப் பெறும்**

185. ஆதி சத்தி தொழிலாற்றும் போது என்ன பெயர் பெறும்?
**திரோதான சத்தி**

186. சதாசிவத்தின் சத்தி யார்?
**மனோன்மணி**

187. மகேசனின் சத்தி யார்?
**மகேசை (மகேசுவரி)**

188. உருத்திரனின் சத்தி யார்?

**உமாதேவி**

189. விஷ்ணுவின் சத்தி யார்?

**திரு(இலக்குமி)**

190. பிரமனின் சத்தி யார்?

**வாணி(சரசுவதி)**

191. இறைவனின் வைப்புச்சத்தி எது?

**மாயை**

192. பரிக்கிரக சத்தியின் வேறு பெயர் என்ன?

**வைப்புச் சத்தி**

193. இறைவனின் மூவகைச் சத்தியாகக் கூறப்படுபவர் யாவர்?

**இச்சாசத்தி, ஞானசத்தி, கிரியாசத்தி**

194. இறைவன் திருமேனியாக அமைவது எந்தச் சத்தி?

**திருவருட் சத்தி**



## நான்காம் பகுதி - திருவருள்

195. திருவருட்சத்தி சிவத்தோடு பிரிப்பின்றி நிற்குமோ? பிரிந்து நிற்குமோ?
**பிரிப்பின்றி நிற்கும்**

196. திருவருட்சத்தி ஆன்மாவுக்கு எதுவரை மறைப்பாற்றலாக நிற்கும்?
**ஆன்மாவிடம் ஆணவக்கலப்பு உள்ளவரை**

197. மறைப்பாற்றல் என்பது எந்தச் சத்தி?
**திரோதான சத்தி**

198. முத்திநிலையில் ஆன்மாவுக்குச் சொரூபத் திருமேனியாக இருப்பது எது?
**திருவருட் சத்தி**

199. தன்னை உயிர் அறிந்து கொள்ளாதபடி உள் நின்று படைத்தல், காத்தல், அழித்தல், மறைத்தலாகிய நான்கு தொழில்களைச் செய்து வருவது எந்தச் சத்தி?
**திரோதான சத்தி**

200. திருவருள் குருவாக வருவது எப்போது?
**உயிருக்கு அருளல் தொழிலைக் செய்ய வேண்டிய காலத்தில்**

201. உயிரை விட்டுப் பிரியாமல் எப்போதும் உயிருக்குத் துணையாக இருப்பது எந்தச் சத்தி?
**திருவருட் சத்தி**

202. திருவருள் சகல வருக்க ஆன்மாவுக்கு யாரை அதிட்டித்து நின்று அருள் புரியும்?
**குருநாதரை**

203. உயிர்களின் கன்மங்களை நுகரவைப்பது எந்தச் சத்தி?
**திரோதான சத்தி**

204. பக்குவம் முதிர்ந்த ஆன்மாக்களுக்குச் சிவத்தைக் காட்டுவது எந்தச் சத்தி?
**திருவருட் சத்தி**

## ஐந்தாம் பகுதி - உயிர்

205. உயிரின் வேறு பெயர்கள் யாவை?
**அணு, பசு, சதசத்து, ஆன்மா**

206. உயிருக்கு அணு என்ற பெயர் எந்த நிலைக்கு உரியது?
**ஆணவத்தால் அணுத்தன்மைப் பட்ட நிலைக்கு**

207. உயிருக்குப் பசு என்ற பெயர் எந்த நிலைக்கு உரியது?
**முப்பாசங்களால் கட்டுற்ற நிலைக்கு**

208. உயிருக்குச் சதசத்து என்ற பெயர் வந்தது ஏன்?
**சத்தும் ஆகாமல், அசத்தும் ஆகாமல் அவற்றோடு சார்ந்ததன் வண்ணமாய் இருத்தலின்**

209. உயிருக்கு ஆன்மா என்ற பெயர் எந்த நிலைக்கு உரியது?
**வியாபக அறிவைப் பெற்ற நிலைக்கு**

210. ஆன்மா சத்தா? அசத்தா?
**சத்தும் அல்ல; அசத்தும் அல்ல. அது சதசத்து.**

211. பசு என்ற சொல்லின் பொருள் என்ன?
**பாசத்தோடு சம்பந்தம் உடையது.**

212. உயிர்களை இறைவன் படைக்கிறானா?
**இல்லை (உயிரின் உடம்பு கடவுளால் படைக்கப்படுகிறது)**

213. உயிரின் பொது இயல்பு யாது?
**கருவிகரணங்களோடு கூடி நிற்றல்.**

214. உயிரின் சிறப்பு இயல்பு யாது?
**கருவிகரணங்களினின்று நீங்கி, உடனாய் நிற்கிற சிவமாய் நிற்றல்.**

215. உயிருக்கு அறியாமையைச் செய்வது ஆணவமா? மாயையா?
**ஆணவம்**

216. உயிர்களின் மூன்று வகை யாவை?
**விஞ்ஞானகலர், பிரளயாகலர், சகலர், (ஒரு மலத்தார், இருமலத்தார், மும்மலத்தார்)**

217. மும்மலமுடைய உயிர்கள் யார்?

**சகலர்**

218. இருமலமுடைய உயிர்கள் யார்?

**பிரளயாகலர்.**

219. ஒருமலமுடைய உயிர்கள் யார்?

**விஞ்ஞானகலர்**

220. சகலரைப் பிணித்துள்ள மலங்கள் யாவை?

**ஆவணம், கன்மம், மாயை**

221. பிரளயாகலரைப் பிணித்துள்ள மலங்கள் யாவை?

**ஆணவம், கன்மம்**

222. விஞ்ஞானகலரைப் பிணித்துள்ள மலங்கள் யாவை.

**ஆணவம்**

223. சகலர் என்றதன் பொருள் என்ன?

**கலாதி தத்துவங்களோடு கூடிய ஆன்மா**

224. பிரளயாகலர் என்றதன் பொருள் என்ன?

**பிரளய கால முடிவில் கலை நீங்கப் போகிற ஆன்மா.**

225. விஞ்ஞானகலர் என்றதன் பொருள் என்ன?

**விசேட ஞானத்தால் கலை நீங்கப் பெற்ற ஆன்மா.**

226. சகலர்க்கு இறைவன் அருள்புரிவது எப்படி?

**குருநாதர் வழியாக**

227. பிரளயாகலருக்கு இறைவன் அருள்புரிவது எப்படி?
**முன்னின்று**

228. விஞ்ஞானகலர்க்கு இறைவன் அருள்புரிவது எப்படி?
**உள்நின்று**

229. ஆன்மாவின் மூவகை அவத்தைகள் யாவை?
**கேவலம், சகலம், சுத்தம்.**

230. ஆன்மாவின் காரண அவத்தைகள் யாவை?
**கேவலம், சகலம், சுத்தம்**

231. காரண கேவலத்தின் வேறுபெயர் என்ன?
**அநாதி கேவலம்**

232. உயிர்கள் பிறப்புக்கு உட்படாமல் ஆணவத்தோடு மட்டும் கூடிய நிலை யாது?
**அநாதி கேவலம்**

233. உயிர்கள் தனுவாதிகளைப் பெற்று போகம் நுகரும் நிலை யாது?
**சகலநிலை**

234. உயிர்கள் மலப்பிணிப்பு நீங்கிப் பேரின்பம் நுகரும் நிலை யாது?
**சுத்தநிலை**

235. உயிர்களின் காரிய அவத்தைகள் யாவை?
**சாக்கிரம், சொர்ப்பனம், சுழுத்தி, துரியம், துரியாதீதம்**

236. சாக்கிரம் முதலிய ஐந்தின் தமிழ்ப் பெயர்கள் யாவை?

**நனவு, கனவு, உறக்கம், பேருறக்கம், உயிர்ப்படக்கம்**

237. ஐந்து அவத்தைகள் நிகழும் இடங்கள் யாவை?

**இலாடத்தானம், கண்டம், இதயம், நாபி, மூலாதாரம்.**

238. இலாடத்தானத்தின் வேறுபெயர்கள் யாவை?

**புருவமத்தி, கோதண்டம்.**

239. உயிருக்கு உரிய ஐந்து சரீரங்கள் யாவை?

**காரண சரீரம், கஞ்சுக சரீரம், குண சரீரம், சூக்கும சரீரம், தூல சரீரம்.**

240. அசுத்தமாயா தத்துவம் ஏழில் ஒன்றான மாயை என்ற தத்துவத்தாலான சரீரம் எது?

**காரண சரீரம்**

241. அசுத்தமாயா தத்துவங்களான காலம், நியதி, கலை, வித்தை, அராகம் என்று ஐந்தும் கூடிய புருட தத்துவம் என்ன சரீரம்?

**கஞ்சுக சரீரம்**

242. பிரகிருதிமாயா தத்துவங்களில் ஒன்றான குண தத்துவத்தால் ஆனது என்ன சரீரம்?

**குணசரீரம்**

243. காரணம், கஞ்சுகம், குணம் என்ற மூன்றையும் உள்ளடக்கிய சரீரம் என்ன சரீரம்?

**பரசரீரம்**

244. மனம், புத்தி, அகங்காரம் என்ற அந்தக் கரணம் மூன்றும், தன்மாத்திரை ஐந்தும் ஆகிய எட்டுத் தத்துவங்களால் ஆனது என்ன சரீரம்?

**சூக்கும சரீரம்**

245. சூக்கும சரீரத்தின் வேறுபெயர் என்ன?

**புரியட்ட காயம்**

246. பூதம்-5, கன்மேந்திரியம்-5, ஞானேந்திரியம்-5 ஆகிய பதினைந்து தத்துவங்களால் ஆனது என்ன சரீரம்?

**தூல சரீரம்**

247. தூல சரீரத்தின் வேறு பெயர் என்ன?

**அன்னமய கோசம்**

248. சூக்கும சரீரத்தின் வேறுபெயர் என்ன?

**பிராணமய கோசம்**

249. குண சரீரத்தின் வேறு பெயர் என்ன?

**மனோமய கோசம்**

250. கஞ்சுக சரீரத்தின் வேறு பெயர் என்ன?

**விஞ்ஞானமய கோசம்**

251. காரண சரீரத்தின் வேறு பெயர் என்ன?

**ஆனந்தமய கோசம்**

252. உயிர்கள் சுவர்க்கத்துக்குப் போகும் போது கொள்ளும் சரீரம் யாது?

**பூதசார சரீரம்**

253. உயிர்கள் நரகத்துக்குப் போகும் போது கொள்ளும் சரீரம் யாது?

**யாதனா சரீரம்**

254. உயிர்கள் பெறும் தூல சரீரம், ஒன்றற்கு ஒன்று வேறுபடு வதற்குக் காரணம் யாது?

**உயிர்கள் செய்த வினைகள் வேறுபடுதல்**

255. முத்திநிலையில் ஆன்மா சிவத்துக்குச் சமமாகுமா?

**சமம் ஆகாது; அடிமையேயாகும்**

256. சிவத்தோடு ஆன்மா கூடும் போது பேரின்ப அனுபவம் சிவத்துக்கா, ஆன்மாவுக்கா? இருவருக்குமா?

**ஆன்மாவுக்குமட்டுமே**

257. சிவமும் ஆன்மாவும் கூடிப் பிரித்தறிய வாராத இன்பக் கூட்டுறவு நிலைக்காட்டப்படும் உவமையான புணர் மொழி யாது?

**தாடலை**



## ஆறாம் பகுதி - ஆணவம்

258. மூவகை மலங்கள் யாவை?
**ஆணவம், கன்மம், மாயை**

259. மலங்களை ஐந்தாகக் கணக்கிட்டவர் யார்?
**உமாபதிசிவம்**

260. ஐவகை மலங்கள் யாவை?
**ஆணவம், திரோதாயி, கன்மம், மாயை, மாயேயம்**

261. ஆன்மாவுக்கு அறியாமையைக் செய்யும் மலம் எது?
**ஆணவம்**

262. ஆணவமலம் பொருளால் எத்தனை?
**ஒன்றே**

263. ஆணவமலத்தின் இருவகைச் சத்திகள் யாவை?
**ஆவாரக சத்தி, அதோநியாமிகா சத்தி**

264. கேவல நிலையில் ஆன்ம அறிவை முழுமையாக மறைக்கும் ஆணவசத்தியின் பெயர் என்ன?
**ஆவாரக சத்தி**

265. சகலநிலையில் ஆன்ம அறிவைக் கீழ் நோக்கிச் செலுத்தி விபரீத அறிவை உண்டு பண்ணும் ஆணவ சத்தியின் பெயர் என்ன?
**அதோநியாமிகா சத்தி**

266. ஆணவத்தின் சொரூப இலக்கணம் (சிறப்பு இயல்பு) யாது?
**ஆன்ம அறிவை முழுமையாக மறைப்பது.**

267. ஆணவத்தின் தடத்த இலக்கணம் (பொது இயல்பு)யாது?
**ஆன்ம அறிவை விபரீத விடயங்களில் செலுத்துதல்**

268. ஆணவம் ஆன்மாவின் குணமா? குற்றமா?
**குணமன்று; குற்றமே**

269. பிறபொருளைக் காட்டாமல் தன்னை மட்டும் காட்டுவது எது?
**இருள்**

270. பிற பொருளையும் தன்னையும் காட்டாதது எது?
**ஆணவம்**

## ஏழாம் பகுதி - கன்மம்

271. கன்மமாவது யாது?
**உயிர்கள் செய்த நல்வினை தீவினைகள்**

272. நல்வினையின் வேறு பெயர் என்ன?
**புண்ணியம்**

273. தீவினையின் வேறு பெயர் என்ன?
**பாவம்**

274. புண்ணியத்தால் விளையும் பயன் என்ன?
**இன்பம்**

275. பாவத்தால் விளையும் பயன் என்ன?

**துன்பம்**

276. கன்மத்தின் இரு வகைகள் யாவை?

**காரண கன்மம், காரிய கன்மம்**

277. காரண கன்ம மாவது யாது?

**கேவல நிலையில் முதன் முதலாக விளைந்த மூலகன்மம்**

278. காரண கன்மத்தின் வேறு பெயர் என்ன?

**மூலகன்மம்**

279. காரிய கன்மமாவது யாது?

**காரண கன்மத்தால் விளைந்த கன்மம்**

280. காரிய கன்மத்தின் இருவகைகள் யாவை?

**நல்வினை, தீவினை**

281. நல்வினை என்றால் என்ன?

**ஒரு உயிர் மற்ற உயிர்க்கு மனம், வாக்கு, காயங்களால் செய்த நன்மை**

282. தீவினை என்றால் என்ன?

**ஒரு உயிர் மற்ற உயிர்க்கு மனம், வாக்கு, காயங்களால் செய்த தீமை**

283. வினையின் மூவகைகள் யாவை?

**ஆகாமியம், சஞ்சிதம், பிராரத்தம்**

284. ஆகாமிய வினையின் தமிழ்ப் பெயர் என்ன?

**வருவினை**

285. சஞ்சித வினையின் தமிழ்ப் பெயர் என்ன?

**தொல்வினை**

286. பிராரத்தவினையின் தமிழ்ப்பெயர் என்ன?

**ஊழ்வினை**

287. ஆகாமிய வினை யாவது யாது?

**முன்வினைப்பயனை நுகரும் போது விளைந்து பின்பு வர விருக்கும் வினை**

288. சஞ்சித வினை யாவது யாது?

**நுகரப்படாத ஆகாமிய வினைகளின் குவியல்**

289. பிராரத்த வினையாவது யாது?

**சஞ்சித வினைக்குவியலிலிருந்து எடுத்து ஒரு பகுதியாய் நிகழ் பிறவியில் ஊட்டப் படும் வினை**

290. உயிருக்கு வினைப்பயனை ஊட்டுவது வினையா? இறைவனா?

**இறைவனே**

291. வினைப்பயன் ஊட்டப்படும் மூன்று வகைகள் யாவை?

**ஆதி தைவிகம், ஆதி பௌதிகம், ஆதி ஆன்மிகம்**

292. ஆதி தைவிக மாவது யாது?

**தெய்வத்தால் வரும் வினைப்பயன்**

293. ஆதி பௌதிக மாவது யாது?
**பஞ்ச பூதங்களால் வரும் வினைப்பயன்**

294. ஆதி ஆன்மிகமாவது யாது?
**உயிர்களால் வரும் வினைப்பயன்**

295. ஆன்மாவுக்கு வினைப்பயன் ஊட்டப்படுவது ஏன்?
**ஆணவப்பற்று நீங்கி ஆன்மா திருத்தம் பெற**

296. ஒருவர் செய்த வினைப்பயனை மற்றவர் நுகர்வது உண்டா?
**இல்லை; அவரவர் வினைப்பயனை அவரவரே நுகர வேண்டும்**

297. வினைப்பயன் வினை செய்யப்பட்ட முறைப்படியே வருமா? முன்பின்னாக மாறி வருமா?
**முறையாக வருதலும் உண்டு. முன் பின்னாக மாறி வருதலும் உண்டு**

298. வினைகள் விளைவதற்குக் காரணமான மூவகைச் செய்கைகள் யாவை?
**நினைப்பு, பேச்சு, செய்கை (மனம், வாக்கு, காயத்தால் செய்யப்படுபவை)**

299. நல்வினையால் தீவினையும், தீவினையால் நல்வினையும் அழியுமா?
**அழியமாட்டா**

300. தீவினைப்பயனைப் பிராயச் சித்தத்தால் ஒழிக்க முடியுமா?

**முற்றும் ஒழிக்க முடியாது. வினைப்பயனின் வலிமையைச் சிறிது தணிக்கலாம்**

301. கன்மத்தின் சொரூப நிலை யாது?

**விருப்பு வெறுப்பு**

302. கன்மத்தின் தடத்த நிலை யாது?

**புண்ணிய பாவம்**

303. கன்மம் எந்தத் தத்துவத்தைப் பற்றுக் கோடாகக் கொண்டிருக்கும்?

**புத்தி தத்துவத்தை**

304. கன்மம் ஒடுக்க காலத்தில் எங்கே ஒடுங்கி இருக்கும்?

**மாயையில்**

305. சைவ சித்தாந்தத்தின் வினைக் கொள்கை என்ன?

**வினையைச் செய்தவன், செய்யப்பட்ட வினை, வினையின் பயன், பயனை ஊட்டுபவன் என்ற நான்கும் உண்டு**



## எட்டாம் பகுதி - சுத்த மாயை

306. உலகத்துக்கு முதற் காரணம் மாயையா? இறைவனா?
**மாயை**

307. இருவகை மாயைகள் யாவை?
**சுத்தமாயை, அசுத்தமாயை**

308. மாயை பயன்படும் வகையில் எத்தனை வகைப்படும்?
**சுத்தமாயை அசுத்த மாயை, பிரகிருதி மாயை என மூவகைப்படும்**

309. சுத்தமாயை யாவது யாது?
**மலகன்மங்களோடு கலவாத மாயை**

310. சுத்தமாயையின் இயல்பு யாது?
**மயக்கமின்றி அறிவிப்பது**

311. சுத்தமாயையின் வேறுபெயர்கள் யாவை?
**ஊர்த்துவ மாயை, மாமாயை, குடிலை, விந்து**

312. இறைவன் ஐந்தொழில் நடத்த இடமாக இருப்பது எது?
**சுத்தமாயை**

313. சுத்தமாயையில் உள்ள இருவகைப் பிரபஞ்சங்கள் யாவை?
**ஒலி உலகம், பொருள் உலகம்**

314. ஒலி உலகத்தின் வேறு பெயர் என்ன?
**சப்தப் பிரபஞ்சம் (சொல் உலகம்)**

315. பொருள் உலகத்தின் வேறு பெயர் என்ன?
**அர்த்தப் பிரபஞ்சம் (பொருள் உலகம்)**

316. அத்துவாக்கள் என்றால் என்ன?
**வீடுபேறடைவதற்கான வழிகள்**

317. அத்துவாக்கள் ஆறு யாவை?
**மந்திரம், பதம், வன்னம், கலை, தத்துவம், புவனம்**

318. சப்தப் பிரபஞ்சத்துள் அடங்கும் அத்துவாக்கள் யாவை?
**மந்திரம், பதம், வன்னம்**

319. அர்த்தப் பிரபஞ்சத்துள் அடங்கும் அத்துவாக்கள் யாவை?
**கலை, தத்துவம், புவனம்**

320. அத்துவாவில் ஒன்றான கலையின் ஐந்துவகை யாவை?
**நிவிர்த்தி கலை, பிரதிட்டை கலை, வித்தியா கலை, சாந்தி கலை, சாந்தி அதீத கலை**

321. பஞ்சகலைகளுக்கும் கலைத்தத்துவத்துக்கும் வேறுபாடு என்ன?
**பஞ்சகலைகள் என்பன அத்துவாங்களில் ஒருவகை. கலா தத்துவம் என்பது வித்யா தத்துவம் ஏழில் ஒரு தத்துவம்**

322. சுத்த மாயையில் தோன்றும் நால்வகை வாக்குகள் யாவை?
**சூக்குமை, பைசந்தி, மத்திமை, வைகரி**

323. சுத்த மாயையின் முதல் விருத்தியான வாக்கு எது?
**சுக்குமைவாக்கு**

324. சூக்குமை வாக்கின் விருத்தி யாது?
**பைசந்தி வாக்கு**

325. பைசந்தி வாக்கின் விருத்தி யாது?
**மத்திமை வாக்கு**

326. மத்திமை வாக்கின் விருத்தி யாது?
**வைகரி வாக்கு**

327. வைகரி வாக்காவது யாது?
**தன்செவிக்கும் பிறர் செவிக்கும் கேட்கப்படும் வாக்கு**

328. வாக்குகளின் வளர்ச்சி பரிணாமமா? விருத்தியா?
**விருத்தி**

329. சுத்த தத்துவங்கள் எத்தனை?
**நாதம் முதலிய ஐந்து**

330. சுத்த தத்துவங்கள் என்னென்ன?
**நாதம், விந்து, சாதாக்கியம், ஈசுரம், சுத்த வித்தை**

331. சுத்த தத்துவங்களின் வேறு பெயர் என்ன?
**சிவத்தத்துவங்கள்**

332. சுத்த தத்துவங்கள் எதிலிருந்து தோன்றுகின்றன?
**சுத்த மாயையிலிருந்து**

333. சுத்ததத்துவங்களைத் தோற்றுவித்தவர் யார்?
**சிவன்**

334. சிவ தத்துவம் என்று பெயர்வரக் காரணம் என்ன?
**சிவனால் தோற்றுவிக்கப்பட்டதால்**

## ஒன்பதாம் பகுதி - அசுத்த மாயை

335. அசுத்த மாயையாவது யாது?
**மல கன்மங்களோடு கலந்த மாயை**

336. அசுத்த மாயையின் இயல்பு யாது?
**மயக்கி அறிவிப்பது**

337. அசுத்த மாயையின் வேறு பெயர்கள் யாவை?
**அதோமாயை, மோகினி**

338. அசுத்த மாயா தத்துவங்கள் எத்தனை?
**காலம் முதலிய ஏழு**

339. அசுத்த மாயா தத்துவங்கள் என்னென்ன?
**காலம், நியதி, கலை, வித்தை, அராகம்** புருடன், மாயை

340. அசுத்த மாயா தத்துவங்களின் வேறுபெயர்கள் யாவை?
**வித்தியாதத்துவம், சுத்தாசுத்த தத்துவம்**

341. சுத்தா சுத்த தத்துவங்கள் எதிலிருந்து தோன்றுகின்றன?
**அசுத்த மாயையிலிருந்து**

342. அசுத்த மாயையைத் தொழிற்படுத்துபவர் யார்?
**அனந்த தேவர்**

343. வித்தியா தத்துவம் என்று பெயர் வரக் காரணம் என்ன?
**அனந்த தேவரான வித்தேசுவரால் தோற்று விக்கப் பட்டதால்**

344. இறப்பு, நிகழ்வு, எதிர்வு என்ற கால வேறுபாட்டை உணர்வைத் தரும் தத்துவம் எது?
**கால தத்துவம்**

345. அவரவர் வினைப்பயனை அவரவரே நுகருமாறு நியமிக்கும் தத்துவம் எது?
**நியதி தத்துவம்**

346. ஆன்மாவின் கிரியா சத்தியைச் சிறிதளவு விளங்கவைக்கும் தத்துவம் எது?
**கலைத்தத்துவம்**

347. ஆன்மாவின் ஞான சத்தியைச் சிறிதளவு விளங்க வைக்கும் தத்துவம் எது?
**வித்தைத் தத்துவம்**

348. ஆன்மாவின் இச்சா சத்தியைச் சிறிதளவு விளங்க வைக்கும் தத்துவம் எது?
**அராக தத்துவம்**

349. காலம், நியதி, கலை, வித்தை, அராகம் என்ற ஐந்தும் கூடிய நிலை யாது?

**புருட தத்துவம்**

350. புருட தத்துவத்தைத் தத்துவம் என்பது சரியா?

**அது தத்துவமன்று; தத்துவம் என்றது உபசாரம்**

351. காலம் முதலிய ஐந்தும் தோன்றக் காரணமான தத்துவம் எது?

**வித்யாதத்துவத்துள் ஒன்றான மாயை**

352. சுத்த வித்தைக்கும் வித்தை தத்துவத்துக்கும் வேறுபாடென்ன?

**சுத்த வித்தை சிவ தத்துவங்களில் ஒன்று. வித்தைத் தத்துவம், வித்யாதத்துவங்களில் ஒன்று**

## பத்தாம் பகுதி - பிரகிருதி மாயை

353. பிரகிருதி மாயை யாவது யாது?

**அசுத்த மாயையின் தூலப் பரிணாமம்**

354. சகல வருக்க உயிர்களுக்குத் தனு, கரண, புவன, போகங்களைத் தருகிற மாயை எது?

**பிரகிருதி மாயை**

355. பிரகிருதி மாயையின் வேறு பெயர்கள் யாவை?

**மான், மூலப்பகுதி, அவ்வியத்தம்**
**(மூலப்பகுதி = மூலப்பிரகிருதி)**

356. பிரகிருதி மாயை எதிலிருந்து தோன்றுகிறது?
**வித்யாதத்துவங்களின் ஒன்றான கலைத் தத்துவத்திலிருந்து**

357. முக்குணங்களும் வெளிப்படாமல் சூக்குமமாய் அடங்கி யிருக்கும் நிலை யாது?
**மூலப் பிரகிருதி; (அவ்வியத்தம்)**

358. பிரகிருதி மாயா தத்துவத்தின் வேறு பெயர் என்ன?
**ஆன்ம தத்துவம்**

359. ஆன்ம தத்துவங்களை இயக்குபவர் யார்?
**ஸ்ரீகண்டருத்திரர்**

360. ஆன்மதத்துவம் என்று பெயர் வரக்காரணம் என்ன?
**சகலவர்க்க ஆன்மாக்களின் தலைவரான ஸ்ரீ கண்ட ருத்திரரால் தொழிற்படுத்தப் படுதலால்**

361. ஆன்ம தத்துவங்கள் எத்தனை?
**அந்தக் கரணம்-4; ஞானேந்திரியம்-5, கன்மேந்திரியம்-5; தன்மாத்திரை-5; பூதம் - 5 ஆக 24**

362. அந்தக் கரணம் நான்கு யாவை?
**மனம், புத்தி, அகங்காரம், சித்தம்**

363. அகங்கார தத்துவத்தின் மூன்று வகைகள் யாவை?
**தைசதம், வைகாரிகம், பூதாதி**

364. தைசத அகங்காரத்தில் தோன்றும் தத்துவங்கள் யாவை?
**ஞானேந்திரியம்-5; மனம் - 1**

365. வைகாரிக அகங்காரத்தில் தோன்றும் தத்துவங்கள் யாவை?
**கன்மேந்திரியங்கள் - 5**

366. பூதாதி அகங்காரத்திலிருந்து தோன்றும் தத்துவங்கள் யாவை?
**தன்மாத்திரை-5; பூதங்கள்-5**

367. புறக்கருவிகளான தத்துவங்கள் என்னென்ன?
**மெய், வாய், கண், மூக்கு, செவி**

368. புறக்கருவிகளின் வேறு பெயர் என்ன?
**ஞானேந்திரியங்கள்**

369. உட்கருவிகளான தத்துவங்கள் என்னென்ன?
**மனம், புத்தி, அகங்காரம், சித்தம்**

370. உட்கருவகளின் வேறுபெயர் என்ன?
**அந்தக் கரணம்**

371. உள் உட்கருவிகள் என்னென்ன?
**கலை, வித்தை, அராகம்**

372. கன்மேந்திரியங்கள் என்னென்ன?
**வாக்கு, பாதம், பாணி, பாயு, உபத்தம்**

373. வாக்கு பாதம் முதலியவற்றின் தமிழ்ப்பெயர் என்ன?
**வாய், கால், கை, எருவாய், கருவாய்**

374. தன் மாத்திரை ஐந்து என்னென்ன?
**சப்த, பரிச, ரூப, ரச, கந்தம்**

375. சப்தம் பரிசம் முதலியவற்றின் தமிழ்ப்பெயர் என்ன?

**ஓசை, ஊறு, ஒளி, சுவை, நாற்றம்**

376. ஐம் பூதங்கள் என்னென்ன?

**பிருதிவி, அப்பு, தேயு, வாயு, ஆகாசம்**

377. பிருதிவி முதலியவற்றின் தமிழ்ப்பெயர் என்ன?

**மண், நீர், நெருப்பு, காற்று, வானம்**

378. ஞானேந்திரியத்தின் வேறு பெயர் என்ன?

**அறிகருவிகள்**

379. கன்மேந்திரியத்தின் வேறுபெயர் என்ன?

**செயற்கருவிகள்**

380. தத்துவங்கள் முப்பத்தாறு ஆவது எப்படி?

**சிவதத்துவம் 5, வித்யா தத்துவம் 7, ஆன்ம தத்துவம் 24 = ஆக 36**

381. தத்துவங்கள் தொண்ணூற்றாறு ஆவது எப்படி?

**தத்துவம் 36, தாத்துவிகம் 60 = ஆக 96**

382. தாத்துவிகமாவன யாவை?

**தத்துவங்களின் காரியங்கள்**

383. அகப்பூதங்கள் யாவை?

**ஓசை முதலிய தன்மாத்திரைகள்**

384. அகப்புறப் பூதங்கள் யாவை?

**செவி முதலிய அறிகருவிகள்**

385. புறப்புறப் பூதங்கள் யாவை?

**மண் முதலிய ஐம்பூதங்கள்**

386. நான்கு வகைப் பிறப்பிடங்கள் யாவை?

**முட்டை, வியர்வை, வித்து, கருப்பை**

387. பிறப்பின் வகைகள் என்னென்ன?

**தாவரம், ஊர்வன, நீந்துவன, பறப்பன, விலங்கு, மனிதர், தேவர்.**

## பதினோராம் பகுதி - குரு லிங்க சங்கமம்

388. சைவ சமயத்தார்க்கு உரிய மூவகை வழிபாடுகள் யாவை?

**குரு வழிபாடு, இலிங்க வழிபாடு, சங்கம வழிபாடு**

389. குருநாதர் ஆவார் யார்?

**ஞானத்தைக் கொடுத்துப் பாசத்தை அழிப்பவர்,.**

390. குருநாதரை யாராகக் கருத வேண்டும்?

**சிவமாக**

391. குருநாதரை அதிட்டித்து நின்று ஞானம் வழங்குவது எது?

**திருவருள்**

392. குருவே சிவமென அறிய வல்லவர் யார்?
**பரிபக்குவம் எய்தியவர்**

393. திருவருள் போர்த்திக்கொண்ட போர்வையாகக் கூறப்படுபவர் யார்?
**குருநாதர்**

394. திருவருள் அதிட்டித்த குருநாதர் வடிவத்துக்கு உவமை யாது?
**பார்வை விலங்கு**

395. திருக்கயிலாய பரம்பரையின் முதல் குருநாதர் யார்?
**திருநந்தி தேவர்.**

396. குருநாதர் ஆன்மாக்களின் பாசங்களைப் போக்குவது எப்படி?
**தீட்சையால்**

397. தீட்சை என்ற சொல்லின் பொருள் என்ன?
**ஞானத்தைக் கொடுத்துப் பாசத்தைத் தணித்தல்**

398. தீட்சை எத்தனை வகைப்படும்?
**சமயம், விசேடம், நிர்வாணம் என மூவகை; மற்றும் சட்சு, பரிசம், மானசம் என மூவகை**

399. ஒருவர் சைவ சமயி ஆவதற்குத் தரும் தீட்சை எது?
**சமய தீட்சை**

400. சிவபூசை செய்வதற்கு அதிகாரம் அளிக்கும் தீட்சை எது?
**விசேட தீட்சை**

401. பாசங்களை அறவே நீக்கிச் சிவனடியை அடைவதற்கு அளிக்கும் தீட்சை எது?
**நிர்வாண தீட்சை**

402. குருநாதர் தனது கண் பார்வையால் அளிக்கும் தீட்சை எது?
**சட்சு தீட்சை (சட்சு - கண்)**

403. சட்சு தீட்சைக்குக் காட்டும் உவமை யாது?
**மீன் தன் முட்டையை நோக்குதல்**

404. குருநாதர் தனது கையின் தொடுகையால் அளிக்கும் தீட்சை எது?
**பரிச தீட்சை (பரிசம் - தொடுதல்)**

405. பரிச தீட்சைக்குக் காட்டும் உவமை யாது?
**கோழி தன் முட்டையை அடைகாத்தல்**

406. குருநாதர் தனது மனத்தால் நினைத்து செய்யும் தீட்சை எது?
**மானத தீட்சை**

407. மானத தீட்சைக்குக் காட்டும் உவமை யாது?
**ஆமை மண்ணில் புதைத்த தன் முட்டை நினைத்தல்**

408. சமய தீட்சை பெற்றவர்களுக்கு உரிய உரிமைகள் யாவை?
**மந்திரங்களை உச்சரித்தல், சரியைத் தொண்டு செய்தல்.**

409. விசேட தீட்சை பெற்றவர்களுக்கு உரிய உரிமைகள் யாவை?
**மந்திரம் உச்சரித்தல், சிவபூசை செய்தல், யோகம் செய்தல்.**

410. இறைவனை வழிபடுவதற்கு உரிய இரண்டு இடங்கள் யாவை?
**தாபரம், சங்கமம்**

411. தாபர மாவது யாது?
**இலிங்கத் திருமேனி**

412. சங்கமமாவது யாது?
**அடியார் கூட்டம்**

413. இலிங்க வழிபாடாவது யாது?
**ஆன்மார்த்த லிங்கம், ஆலயத்தில் உள்ள பரார்த்த லிங்கம் என்பவற்றை வழிபடுவது.**

414. ஆலயத்தின் கோபுரம் என்ன இலிங்கம்?
**தூலலிங்கம்**

415. கருவறையில் உள்ளது என்ன இலிங்கம்?
**சூக்குமலிங்கம்.**

416. ஆலயத்தை எவ்வாறு கருத வேண்டும்?
**சிவன் எனவே**

417. ஆலயங்களில் கொடி ஏற்றுவது எதற்காக?
**உலக நன்மைக்காக**

418. கொடியேற்றத்தின் பயன் என்ன?
**ஆன்மாக்களுக்கு இம்மையில் சுகபோகமும் மறுமையின் பரபோகமும்.**

419. கொடிமரம் எதனை நினைவூட்டுகிறது?

**பாதாளத்தை ஊடுருவிய திருவடியையும் வானத்தை ஊடுருவிய திருமுடியையும் உடைய சிவனை**

420. கொடிமரத்தைச் சுற்றிச் சுற்றி மேலேறும் கொடிசீலை எதைக் குறிக்கும்?

**சிவனை விட்டுப் பிரியாத திருவருளை.**

421. கொடிச்சீலையின் மேல்பாகத்தில் வரைந்த இடபம் எதைக் குறிக்கும்?

**ஆன்மாவை.**

422. அடியார்களின் திருவேடம் யாவை?

**திருநீறும், கண்மணியும்**
**(கண்மணி = கண்டிகை, உருத்திராக்கம்)**

423. அடியாரையும் வேடங்களையும் எப்படிக் கருத வேண்டும்.

**சிவனாகவே**

## பன்னிரண்டாம் பகுதி - நான்கு நெறிகள்

424. இறைவன் ஆன்மாக்களுக்கு மானுட சரீரத்தைத் தந்தது எதற்காக?

**மனம், வாக்கு, காயங்களால் சிவனை வழிபடுவதற்காக.**

425. மனத்தால் செய்யும் வழிபாடுகள் யாவை?

**மானத செபம், அக பூசை, தியானம் முதலியன**

426. வாக்கால் செய்யும் வழிபாடுகள் யாவை?

**திருமுறை ஓதல், நாமாவளி கூறல், வாசக செபம் முதலியன.**

427. காயத்தால் செய்யும் வழிபாடுகள் யாவை?

**வலம் வருதல், திருப்பணியில் உடலுழைப்பு, மாலை தொடுத்தல் முதலியன.**

428. வீடுபேறடைவதற்கு உரிய நான்கு நெறிகள் யாவை?

**சரியை, கிரியை, யோகம், ஞானம்.**

429. சரியை நெறியின் வேறு பெயர் என்ன?

**தாசமார்க்கம், அடிமை நெறி.**

430. கிரியை நெறியின் வேறு பெயர் என்ன?

**சற்புத்திர மார்க்கம், தந்தை மகன் நெறி**

431. யோகநெறியின் வேறு பெயர் என்ன?

**சகமார்க்கம், தோழமை நெறி.**

432. ஞானநெறியின் வேறுபெயர் என்ன?

**சன்மார்க்கம்**

433. திருக்கோயிலைக் கூட்டுதல் மெழுகுதல் முதலியன என்ன நெறி?

**சரியை நெறி**

434. இறைவன் திருமேனியைத் தொடாமல் புறத்தே செய்யும் தொண்டாவது யாது?

**புறம்படிமைத் தொண்டு**

435. சரியை நெறியின் பயன் என்ன?

**சாலோக பதவி**

436. சிவனுக்கு அபிடேகம் அலங்காரம் முதலிய செய்தல் என்ன நெறி?

**கிரியை நெறி**

437. இறைவன் திருமேனியைத் தொட்டு அருகில் இருந்து செய்யும் தொண்டாவது யாது?

**அகம்படிமைத் தொண்டு**

438. கிரியை நெறியின் பயன் என்ன?

**சாமீப பதவி**

439. இறைவனை மனத்தில் தியானிப்பது என்ன நெறி?

**யோக நெறி**

440. அட்டாங்க யோகம் என்னென்ன?

**இயமம், நியமம், ஆசனம், பிராணாயாமம், பிரத்தியாகாரம், தாரணை, தியானம், சமாதி**

441. அட்டமா சித்திகள் யாவை?

**அணிமா, மகிமா, லகிமா, கரிமா, பிராத்தி, பிராகாமியம், ஈசத்துவம், வசித்துவம்.**

442. யோகத்தின் ஆறு ஆதாரங்கள் யாவை?

**மூலாதாரம், சுவாதிட்டானம், மணிபூரகம், அநாகதம், விசுத்தி, ஆஞ்ஞா.**

443. யோக நெறியின் பயன் என்ன?

**சாரூப பதவி**

444. கேட்டல், சிந்தித்தல், தெளிதல், நிட்டைகூடல் என்பன என்ன நெறி?

**ஞான நெறி**

445. சாதன ஞானமாவது யாது?

**சரியை முதலிய நான்கில் ஒவ்வொன்றும்.**

446. அனுப ஞானமாவது யாது?

**சாதன ஞானத்தால் பெறும் பேறு**

447. ஞானத்தில் சரியை யாவது யாது?

**ஞானநூற்பொருளைக் கேட்டல்**

448. ஞானத்தில் கிரியை யாவது யாது?

**குருவிடம் கேட்டதைச் சிந்தித்தல்.**

449. ஞானத்தில் யோகமாவது யாது?

**சிந்தித்தவற்றை யோக சாதனத்தால் தெளிதல்**

450. ஞானத்தில் ஞானமாவது யாது?

**சிவத்தோடு அபேதமாய்க் கலந்து நிட்டை கூடுதல்.**

451. இறப்பில் தவமாவது யாது?

**அழிவில்லாத சரியை முதலிய சிவபுண்ணியம்**

452. இறக்கும் தவமாவது யாது?

**வேள்வி முதலியன**

453. இருவினை ஒப்பாவது யாது?
**புண்ணிய பாவப் பயனான இன்பதுன்பம் வரும் போது விருப்பு வெறுப்பின்றி சமபுத்தி பண்ணி ஏற்றல்.**

454. இருவினை ஒப்பால் உண்டாவது என்ன?
**சத்திநிபாதம்**

456. சத்திநிபாதத்தின் வகைகள் என்னென்ன?
**மந்தரம், மந்தம், தீவிரம், தீவிரதரம்.**

457. ஏகனாகி நிற்றல் என்றால் என்ன?
**ஆன்மா இறைச் சார்பில் ஒன்றி நிற்றல்**

458. இறைபணி நிற்றல் என்றால் என்ன?
**எல்லாம் சிவம் செயல் என்று ஒழுகல்**

459. ஏகனாகி நிற்றலால் எந்த மலவாசனை தாக்காது?
**ஆணவமல வாசனை**

460. இறைபணி நிற்றலால் எந்தெந்த மல வாசனை தாக்கமாட்டா?
**மாயா மலவாசனையும் கன்ம மல வாசனையும்.**



## பதின்மூன்றாம் பகுதி - திருவைந்தெழுத்து

461. மந்திரங்களில் தலையாய மந்திரம் எது?
**திருவைந்தெழுத்து.**

462. மந்திரராஜம் என்று அழைக்கப்படுவது எது?
**திருவைந்தெழுத்து**

463. ஐந்தெழுத்தின் வடமொழிப்பெயர் என்ன?
**பஞ்சாக்கரம்**

464. ஐந்தெழுத்தின் மூன்று வகைகள் யாவை?
**தூல பஞ்சாக்கரம், சூக்கும பஞ்சாக்கரம், காரண பஞ்சாக்கரம்**

465. தூல பஞ்சாக்கரம் எது?
**நமசிவாய**

466. சூக்கும பஞ்சாக்கரம் எது?
**சிவாயநம**

467. காரண பஞ்சாக்கரம் எது?
**சிவயசிவ**

468. காரண பஞ்சாக்கரத்தின் வேறுபெயர் என்ன?
**அதிசூக்கும பஞ்சாக்கரம்**

469. இருதலை மாணிக்கம் என்று குறிக்கப்படும் பஞ்சாக்கரம் எது?
**சிவயசிவ**

470. நமசிவாய என்று ஓதினால் வரும் பயன் என்ன?

**இம்மை இன்பம்.**

471. சிவாயநம என்று ஓதினால் வரும் பயன் என்ன?

**முத்திப்பேறு**

472. அதிசூக்கும பஞ்சாக்கரத்தால் வரும் பயன் என்ன?

**சீவன்முத்த நிலையிலிருந்து வழுவாதிருத்தல்**

473. நமசிவாய என்பது என்ன பஃஞசாக்கரம்?

**தூல பஞ்சாக்கரம்**

474. சிவாயநம என்பது என்ன பஞ்சாக்கரம்?

**சூக்கும பஞ்சாக்கரம்**

475. சிவயசிவ என்பது என்ன பஞ்சாக்கரம்?

**அதிசூக்கும பஞ்சாக்கரம்**

476. நமசிவாய என்று ஓதத்தக்கவர் யார்?

**உலக போகத்தை விரும்பும் பெத்தான்மாக்கள்**

477. சிவாயநம என்று ஓதத்தக்கவர் யார்?

**விடுபேற்றை விரும்பும் பெத்தான்மாக்கள்**

478. சிவயசிவ என்று ஓதத்தக்கவர் யார்?

**சீவன் முத்தர்**

479. சிவாயநம என்பதில் சிகரம் எதைக் குறிக்கும்?

**சிவத்தை**

480. சிவாயநம என்பதில் வகரம் எதைக்குறிக்கும்?
**திருவருளை**

481. சிவாயநம என்பதில் யகரம் எதைக் குறிக்கும்?
**ஆன்மாவை.**

482. சிவாயநம என்பதில் நகரம் எதைக் குறிக்கும்?
**திரோதான சக்தியை; மற்றும் மாயா கன்ம மலங்களை**

483. சிவாயநம என்பதில் மகரம் எதைக் குறிக்கும்
**ஆணவமலத்தை**

484. சிவாயநம என்பதில் சிவ என்பது குறிக்கும் நடம் எது?
**ஞானநடம்**

485. சிவாயநம என்பதில் நம என்பது குறிக்கும் நடம் எது?
**ஊனநடம்**

486. திருவைந்தெழுத்தில் ஊனநடம் குறிக்கும் நிலை எது?
**பெத்த நிலை**

487. திருவைந்தெழுத்தில் ஞானநடம் குறிக்கும் நிலை எது?
**முத்திநிலை**

488. ஆச்சாரிய பஞ்சாக்கரமாவது யாது?
**ஐந்து எழுத்துக்கொண்ட சமயாச்சாரியர்களின் பெயர்கள்**

489. ஆச்சாரிய பஞ்சாக்கரங்கள் என்னென்ன?

**ஞானசம்பந்தர், நாவுக்கரசர், நம்பிஆரூரர், மணிவாசகர். (இவற்றில் ஒற்றெழுத்துக்களை நீக்கி எழுத்தெண்ண வேண்டும்)**

490. ஆச்சாரிய பஞ்சாக்கரத்தின் வேறு பெயரென்ன?

**பக்தபஞ்சாக்கரம்**

491. பக்த பஞ்சாக்கரம் முத்தி அளிக்குமா? சான்று தருக.

**முத்தி அளிக்கும். நம்பி ஆரூரர் என்ற நாமத்தை ஓதிப்பெருமிழலைக் குறும்பர் முத்தி பெற்றார். நாவுக்கரசர் என்ற நாமத்தை ஓதி அப்பூதியடிகள் முத்தி பெற்றார்.**

492. ஓம் என்ற பிரணவம் பஞ்சாக்கரமாகுமா?

**ஆகும்**

493. பிரணவத்தில் அடங்கிய மூன்று எழுத்துக்கள் யாவை?

**அகரம், உகரம், மகரம்**

494. பிரணவத்தின் கலைகள் யாவை?

**அகரம், உகரம், மகரம், விந்து, நாதம்**

495. திருவைந்தெழுத்தின் ஐந்தெழுத்துக்கள் குறிக்கும் ஐந்து பொருள்கள் பிரணவத்தில் எவ்வாறு அடங்கும்?

**பிரணவத்தின் அகரம் சிவத்தைக் குறிக்கும், இதில் திருவருளும் அடங்கும். உகரம் உயிரைக் குறிக்கும், மகரம் மலத்தைக் குறிக்கும், இதில் திரோதாயி அடங்கும்.**

496. பிரணவ கலைகளுக்குரிய அதிதெய்வங்கள் யாவர்?
**அகரத்துக்குப் பிரமன், உகரத்துக்கு விஷ்ணு, மகரத்துக்கு உருத்திரன், விந்துவுக்கு மகேசன். நாதத்துக்குச் சதாசிவம்**

## பதினான்காம் பகுதி - சீவன் முத்தர்

497. சிவானந்த அனுபவம் ஒன்றற்கே உரியவர் யாவர்?
**சீவன் முத்தர்**

498. சீவன் முத்தரின் வேறுபெயர் என்ன?
**சிவஞானிகள், அணைந்தோர்**

499. சிவானந்தம் நுகர்ந்து ஆனந்த நித்திரையில் இருப்பர் யார்?
**சீவன் முத்தர்கள்**

500. ஆமைபோல, இடர் வருவதற்கு முன்பே ஐம்புலனும் அடக்கிச் சிவத்திடம் அடங்கி இருப்பவர் யாவர்?
**சிவஞானிகள்**

501. பிரபஞ்ச பதார்த்தங்களைப் பாராமல் பரமே பார்த்திருப்பவர் யார்?
**சிவஞானியர்**

502. இம்மையிலேயே சிவமாம் தன்மை பெற்று வியாபகமுற்றவர் யார்?
**சீவன் முத்தர்கள்**

503. உள்ளும் புறம்பும் சிவமாகவே காண்பவர் யாவர்?
**சிவஞானியர்**

504. சீவன்முத்தர்கள் எதிலும் விரும்பு வெறுப்பு இன்றி இருக்கக் காரணம் என்ன?
**எல்லாவற்றையும் சிவமாகவே காண்பதால்**

505. சீவன் முத்தரின் பிராரத்த வினை எப்படிக் கழியும்?
**உடல ஊழாய்க் கழியும்**

506. பரமுத்தி இன்பத்தை இம்மையிலேயே பெறுபவர்கள் யார்?
**சிவஞானிகள்**

507. குருவின் துணையால் ஞான நிட்டை கைகூடியவர் யார்?
**சீவன்முத்தர்கள்**

508. எள்ளளவு செய்த தானம் மலையளவு பலனைத் தருவது எப்போது?
**சிவஞானிக்கு தானம் செய்தபோது**

509. ஓடும் செம்பொனும் ஒப்பநோக்குகிற சமபுத்தியைப் பண்ணுவோர் யார்?
**சிவஞானிகள்**

510. தூங்குவோன் கையில் பம்பரம் போல, ஆசாரம் முதலியவற்றைத் தாமே கழல விடுபவர் யார்?
**சிவஞானிகள்**

511. எங்கெழில் என் ஞாயிறு என்று இறுமாந்திருப்பவர் யார்?
**சிவஞானிகள்**

## பதினைந்தாம் பகுதி - முத்தி நிலை

512. ஆன்மாக்கள் பாசங்களில் கட்டுண்டு நிற்பது என்ன நிலை?
**பெத்த நிலை**

513. ஆன்மாக்கள் பாசங்களிலிருந்து விடுபட்டுச் சிவத்தோடு கலந்து அடங்கி நிற்பது என்ன நிலை?
**முத்தி நிலை**

514. முத்தி என்ற சொல்லின் பொருள் என்ன?
**கட்டிலிருந்து விடுபடுதல்**

515. முத்திநிலையின் இருவகைகள் யாவை?
**பதமுத்தி, பரமுத்தி**

516. பதமுத்திகள் யாவை?
**சாலோகம், சாமீபரம், சாரூபம்.**

517. பரமுத்தியாவது யாது?
**சாயுச்சியம், திருவடிப் பேறு**

518. பதமுத்திக்கும் பரமுத்திக்கும் வேறுபாடென்ன?
**பதமுத்தி ஒரோ வழிப்பிறவியைத் தரக்கூடும்; பரமுத்தி மீண்டும் பிறவிக்கு வாரா நெறி.**

519. சரியையில் நின்றோர் பெறும் முத்திய யாது?
**சாலோக பதமுத்தி**

520. கிரியையில் நின்றோர் பெறும் முத்தி யாது?
**சாமீப பதமுத்தி**

521. யோகநெறியில் நின்றோர் பெறும் முத்தி யாது?
**சாரூப பதமுத்தி**

522. ஞானநெறியில் நின்றோர் பெறும் முத்தி யாது?
**சாயுச்சிய பரமுத்தி**

**சைவசித்தாந்த வினாடி விடை முற்றும்**





திருஞானசம்பந்தர் திருநாவுக்கரசர் சுந்தரர் மாணிக்கவாசகர்

**சிவனே நம் இறை**

**குறளே நம் மறை**

**நால்வர் நம் துணை**

